


உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்திலதைப்பதிப் புராண வசனம்.

இஃது

யாழ்ப்பாணத்து வதிரி வித்வான்,

சி. நாகலிங்க பிள்ளை அவர்களால்

கற்றோரும் மற்றோருமாகிய யாவருக்கும்
உபயோகமாகும்படி வசன ரூபமாக இயற்றப்பெற்று

மேற்படி சிவாலய பரிபாலகர்,

தேவகோட்டை,

மெ. லெ. ரும. லெட்சுமணன் செட்டியாரவர்களால்

மாயவரம், வஸந்தா பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1941.

பதிப்பு உரிமை செய்தது.








உ

## நால்வர் துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரான் அடிபோற்றி
வாழிமலி திருநாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

உ

சிவமயம்.

சுவர்ணவல்லியம்பாள் சமேத மந்தாரவன நாயகர் துணை.

# படல அட்டவணை.

---

| படலம். | | பக்கம். |
| --- | --- | --- |

31-2

## முகவுரை.

திருத்திலதைப்பதிச் சிவக்ஷேத்திரத்திற்கு திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரத்திருப்பதிகம் ஒன்று இருக்கிறது திருநாவுக்கரசு நாயனார் திருத்தலக் கோவைத் திருத்தாண்டகத்தில் "மந்தாரம்" என்று இத்தலம் குறிப்பிட்டிருக்கிறது. இன்னும் சில ஆன்றோர் திருவாக்குக்களாகிய திருமுறைகளும் பாடப் பெற்றுள்ளன. இந்த க்ஷேத்திர மான்மியத்தை அச்சிட்டு வெளியாக்க வேண்டுமென்று எண்ணிப் பலரிடமும் விசாரித்ததில் இத்தலத்துக்கு வடபக்கம் அரிசிலாற்றுக்குச் சமீபம் செம்மங்குடி என்ற ஊரில் நாராயணசாமி சாஸ்திரிகளிடம் ஒரு ஏட்டுப்பிரதி சமஸ்கிருதத்தில் இருந்தது. அது தஞ்சை சரஸ்வதி மாலில் இருந்த பிரதியை பார்த்து எழுதிக்கொண்டு வந்தது என்று தெரிகிறது.

அந்தப் பிரதியைத் திருவேட்டக்குடிச் சிவக்ஷேத்திரத்தில் பூஜை செய்த ஆதிசைவ சிவாசாரியர் பிச்சுக்குருக்கள்யா அவர்களிடம் கொடுத்து தமிழ் வசனமாக மொழி பெயர்த்து வாங்கினேன். அவ்வசனத்தை நன்றாகப் பாடலாக அச்சிட விரும்பி எனது ஆசிரியர் யாழ்ப்பாணம் வித்துவான் ஸ்ரீமது சி. நாகலிங்க பிள்ளை அய்யா அவர்களிடம் கொடுத்தேன் அவர்கள் சொல் நயம், பொருள் நயம், அணி நயம், இயற்கை வர்ணனை, பல நீதிகள், அரிய பல விஷயங்கள் அமையக்காப்பிய இலக்கணப்படி நாடு, நகரம், நதி வர்ணனையுடன் புராண நூலாக விருத்தச்செய்யுளாய் இயற்றித் தந்தார்கள் அதனை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன்.

இப்பொழுது எல்லாருந் தெரிந்துகொள்ளும்படி ஷை புராணத்தை வசனமாய் இயற்றித் தரவேண்டுமென்று எனது ஆசிரியரவர்களிடம் கேட்டுக்கொண்டதின் பேரில் அவர்கள் இனிய செந்தமிழ் வசனமாய் இயற்றித்தந்தார்கள். அதனையும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன்.

இப்புராணம் கிரந்த ஓலை ஏட்டில் இருந்ததைத் தந்த நாராயணசாமி சாஸ்திரிகளவர்களுக்கும் மொழி பெயர்த்து தந்த பிச்சுக்குருக்களய்யா அவர்களுக்கும் தமிழ் வசனமாகச் செய்து உதவிய எனது ஆசிரியரவர்களுக்கும் இன்னும் இது விஷயத்தில் உதவியாக இருந்து செய்த மெய்யன்பர்களுக்கும் என்னுடைய மனமார்ந்த வந்தனத்தை தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

இத்தலம் எனது பிதா தேவகோட்டை மெ. லெ. ரம. ராமநாதன் செட்டியாரவர்களால் 1907-ம் ஆண்டில் திருப் பணிக்கு ஆரம்பம் செய்யப்பெற்று, எனது சிறியதகப்பனர் மெ. லெ. லெ. லெட்சுமணஞ் செட்டியாரவர்களால் திருப் பணி பூர்த்தி செய்து என்னிடம் இருந்துவருகிறது.

இந்தச்சுயம்பு மூர்த்தியாகிய ஸ்ரீ சுவர்ணவல்லியம்மாள் சமேத மந்தாரவனேஸ்வரர் அநுக்ரஹத்தினால் இப்பொழுது நாலுகால பூஜையும் உபயக்காரர்கள் அன்புடன் செய்கிற உபயங்களும், தேவகோட்டை அள. சித. அள. அழகப்ப செட்டியாரவர்களால் ஏற்பாடு செய்யப்பெற்ற நந்தவனமும் செவ்வனே நடைபெற்று வருகின்றன.

வசிப்பதற்கு வசதியான இடம், அநேகம் சிவ க்ஷேத்திரங்கள் இத்தலத்தைச்சூழ உள்ளன. எல்லாரும் வந்து தரிசனம் செய்து எல்லா நன்மைகளையும் அடையும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்த க்ஷேத்திரத்திற்கு வருகிறமார்க்கம் தென் இந்தியா ரயில்வே (S. I. R.) மாயவரம் அரந்தாங்கி லயனில் "பூந்தோட்டம்" ஸ்டேஷனுக்கு மேற்கே ஒருமைல் தூரத்தில் அரிசிலாற்றின் தென் கரையில் உள்ளது.

இத்தலம் இப்பொழுது "கோவில்பத்து" என்று வழங்கி வருகிறது.

இங்ஙனம்,

திருத்திலதைப்பதிச் சிவாலய தர்ம பரிபாலகர்,

மெ. லெ. ரும. லெட்சுமணன் செட்டியார்,

தேவகோட்டை.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தில்லைப்பதித் தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்,

## உ-ம் திருமுறை பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

---

பொடிகள்பூ சிப்பல தொண்டர்கூ டிப்புலர் காலையே
அடிகளா ரத்தொழு தேத்தநின் றவ்வழ கன்னிடம்
கொடிகோளோங் கிக்குல வும்விழ வார்தில லைப்பதி
வடிகள்சோ லைம்மலர் மணங்கம ழும்மதி முத்தமே. 1

தொண்டர்மின் டிப்புகை விம்முசாந் துங்கமழ் துணையலும்
கொண்டுகண் டார்குறிப் புணரநின் றகுழ கன்னிடம்
தெண்டிரைப் பூம்புன லரிசில்சூழ்ந் ததில லைப்பதி
வண்டுகெண் டுற்றிசை பயிலுஞ்சோ லைம்மதி முத்தமே. 2

அடலுளே றுய்த்துகந் தானடி யாரம ரர்தொழக்
கடலுணஞ் சமமு தாகவுண் டகட வுள்ளிடம்
திடலடங் கச்செழுங் கழனிசூழ்ந் ததில லைப்பதி
மட லுள்வா ழைக்கனி தேன்பிலிற் றும்மதி முத்தமே. 3

கங்கைதிங் கள்வன்னி துன்னெருக் கின்னேடு கூவிளம்
செங்கணு கம்விரி சடையில்வைத் தவிகிர் தன்னிடம்
செங்கயல் பாய்புன லரிசில்சூழ்ந் ததில தைப்பதி
மங்குல்தோ யும்பொழில் சூழ்ந்தழ கார்மதி முத்தமே 4

புரவியே ழும்மணி பூண்டியங் குங்கொடித் தேரினன்
பரவிநின் றுவழி பாடுசெய் யும்பர மேட்டியூர்
விரவிஞா ழல்விரி கோங்குவேங் கைசுர புன்னைகள்
மரவமவ் வன்மல ருந்தில தைம்மதி முத்தமே. 5

விண்ணர்வே தம்விரித் தோதவல் லாரொரு பாகமும்
பெண்ணரெண் ணரெயில் செற்றுகந் தபெரு மானிடம்
தெண்ணிலா வின்னொளி தீண்டுசோ லைத்தில தைப்பதி
மண் ணுலார் வந்தருள் பேணநின் றம்மதி முத்தமே. 6

ஆறுசூ டியடை- யார்புரஞ் செற்றவர் பொற்றொடி
கூறுசே றும்முரு வர்க்கிட மாவது கூறுங்கால்
தேறலா ரும்பொழில் சூழ்ந்தழ கார்தில தைப்பதி
மாறிலா வண்புன லரிசில் சூழ்ந் தம்மதி முத்தமே. 7

கடுத்துவந் தகனன் மேனியி னுன் கரு வரைதனை
எடுத்தவன் றன்முடி தோளடர்த் தார்க்கிட மாவது
புடைக்கொள்பூ கத்திளம் பாளைபுல் கும்மதுப் பாயவாய்
மடுத்துமந் தியுக ளுந்தில தைம்மதி முத்தமே. 8

படங்கொணு கத்தணை யானும்பைந் தாமரை யின்மிசை
இடங்கொணுல் வேதனும் ஏத்தநின் றவிறை வன்னிடம்

திடங்கொணு வின்னிசை தொண்டர்பா டுந்தில தைப்பதி
மடங்கல்வந் துவழி பாடுசெய் யும்மதி முத்ரமே. 9

புத்தர்தே ரர்பொறி யில்சம ணர்கரு விறிலாப்
பித்தர்சொன் னம்மொழி கேட்கிலாப் பெரு மானிடம்
பத்தர்சித் தர்பணி வுற்றிறைஞ் சுந்தில தைப்பதி
மத்தயா னைவழி பாடுசெய் யும்மதி முத்தமே. 10

மந்தமா ரும்பொழில் சூழ்தில தைம்மதி முத்தர்மேல்
கந்தமா ருங்கடற் காழியுள் ளான்தமிழ் ஞானசம்
பந்தன்மா லைபழி திரநின் றேத்தவல் லார்கள் போய்ச்
சிந்தைசெய் வார்சிவன் சேவடி சேர்வது திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# திருத்திலதைப்பதிப் புராண வசனம்.

## கடவுள் வாழ்த்து.



### காப்பு.

பூமேவு திருமாலும் புகழ்மேவு
திசைமுகனும் பொற்பு வாய்ந்த
நாமேவு கலைமகளு நலமேவு
திருமகளு நணுகி வாழுங்
காமேவு திலதையெனுங் கவின்மேவு
திருப்பதியிற் கணங்களோடுந்
தாமேவு கணபதியின் றுணைமேவு
திருவடியைத் துதிப்பா மன்றே. 1

வேறு.

ஆதிவிநாயகர்.

அங்குமா யிங்குமாகி யநாதியாய்ப் பலவா யானைத்
துங்கமா முகமுந்தூய துதிக்கரந் தானுமின்றிப்
பங்கயப் பழன வேலித் திலதையாம் பதியின் மேவும்
புங்கவ ஞதிநாதன் புதுமலர்த் தாள்கள் போற்றி. 2

### முத்தீசுவரர்.

மலரயன் முகுந்தன் பூமின் மாதுமை வணங்கி யேத்தத்
திலதருப் பணப்பேர் கொண்ட திருத்தல மதனின்மன்னி
யிலகுமுத் திராக்கமேனி யீசனே யெம்மான் றன்னைக்
குலவுமுத் தீசனென்னுங் குழகனை யேத்தி வாழ்வாம். 3

### சுவணவல்லி அம்மை.

மண்ணெலாம் படைப் போன்ருனு மறந்ததன் ரெழிலுக்காகப்
பண்ணிய பூசைப் போது பரந்தவன் மீகக் கீழ்பாற்
கண்ணிணைகவரும் பொன்போற் காண்டகு மேனிகொண்டு
நண்ணிய சுவணவல்லி நற்பதம் போற்றி போற்றி. 4

சுரும்பமர் குழல்கள் போற்றி சுந்தரவதனம் போற்றி
அரும்புபுன் முறுவல் போற்றி யாரணற் கருள்செ யம்மை
கரும்புறு பழனவேலித் திலதைக்காஞ் சனமா வல்லி
சிரம்பெறு பதுமநேருஞ் சேவடி போற்றி போற்றி. 5

### தக்ஷிணுமூர்த்தி

பதிபசு பாசமூன்றும் பகர்சிவ ஞான போதம்
விதிதரு சனகனுதி வேதியர்க் காலின் பாங்கர்
மதிகொள வுபதேசித்த மவுனிதென் முகங்கொண் மூர்த்தி
கதிதரு கமல பாதங் கருத்தினிற் கொள்வாமன்றே. 6

### விநாயகர்.

விழைதரு முச்சிமீது விளங்கிழை மகுட மின்னப்
பிழைதபு மருப்பின் கண்ணே பீடுறு மணிப்பூ ணேங்கத்
தழைசெவிக் கவரி ஞாலத் தகுகய முகத்து நால்வாய்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி மனத்துள்வைப்பாம் 7

சுப்பிரமணியர்.

நீறணி பெருமானெற்றி நாட்டமே லருளாற் றோன்றி
மாறுகொ ளன்றில்வெற்புந் தாரக மன்னன் றானும்
வீறுசூர் முதலுமாள வேற்படை யதனாற் செற்ற
ஆறுமா முகத்துவள்ள லடியிணை போற்றி போற்றி. 8

திருஞானசம்பந்தர்.

பழிபடு கண்டு முட்டும் பண்பிலாக் கேட்டு முட்டு
மொழிதரு மமணர்புத்தர் மொய்வலி யழிய வேத
வழிவரு சைவவாய்மை வைதிக நீறு வாழக்
கழுமல நகரில் வந்த கவுணியன் கழல்கள் போற்றி. 9

திருநாவுக்கரசர்.

நீண்டவன் பிரமன்காணா நின்மலன் சூலை நோயால்
ஆண்டநா வரையராழி யக்கரமைந்தால் நீந்திப்
பூண்டமெய் யன்பர்நாடிப் போற்றுதே வாரந் தந்த
தாண்டகச்சதுரர்தாள் கள்தலைமிசைத்தரித்தல் செய்வாம் 10

சுந்தரர்.

அருட்டுறை யமலன்றானே யாவணவோலை காட்டி
மருட்டுறை யகற்றி யாண்ட மன்னவ னாவலூரன்
குருட்டொடு கூனை மாற்றும் பழமொழி கூறக்கேட்டுத்
தெருட்டுறு மவர்தம்பாதஞ் சிரமிசைச்சூடல்செய்வாம். 11

மாணிக்கவாசகர்.

தத்துதெண் டிரைநீர்வையைத்தண்கரையடைத்துமண்ணல்
நத்துவெண் ணரைமூ தாட்டி நல்கிய பிட்டையுண்டு
புத்தமு தென்னுங்கோவை புகன்றிட வெழுது மெங்கள்
பித்தனை யேவல்கொண்ட பெருந்தகை பாதம் போற்றி 12

அறுபத்துமூன்று நாயன்மார்கள்.

சரியைநற் கிரியா யோகந் தவலரு ஞான மார்க்கத்
தருளுறு நிலையினின்றே யரன்கழல் மறவா தேத்திப்
பெரியவர் பாதம் பேணிப் பிறவிவே ரறுத்து விடு
மருவறுபத்துமூவர் மலரடி மனத்துள் வைப்பாம் 13

மற்றைய நாயன்மார்கள்.

தருநிழல் வாழ்க்கை வேண்டார் தாமரைவாழ்வுஞ் சேரார்
பொருவிலி யநாதி முத்த புண்ணியப் பெருமான் பாத
மருவுமத் துவிதா னந்த மாண்பம ரின்ப வாழ்க்கை
விருப்புறு நாயன் மார்தம் விரைமலர்க் கழல்கள்போற்றி 14

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

## புராண வரலாறு.

சைவ புராணம் பத்தில் ஒன்றாகிய சைவ மகாபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்தில் ஏகாதச ருத்திர சங்கிதையில் திலதருப்பணபுரிமான்மியம் சொல்லப்பெற்றுளது.

—oo:o:oo—

# சதுர்முகன் பூசைசெய் படலம்.



**வே**தவியாச முனிவரின் மாணாக்கராகிய சூதமுனிவர் சௌனகர் முதலான முனிவர்களே! கேளுங்கள் என்று திருத்திலதைப்பதி மான்மியத்தைக் கூறியருள்வார்:—

உலக மூன்றினுள்ளும் முதல் உலகமாகிய மேலுலகத்தில் இருக்கும் ஐந்தருக்களில் மந்தாரதரு மேலானது. பிறை மதிவேணிப்பரமன் பார்மிசைத் தலங்களில் திலதருப் பணபுரி மிக மேலானது. அப்பதி எங்கே உள்ளது என்னில் கூறுவாம்.

பொன்னிநதிபாயும் புகழ் நிறைந்த சோழவளநாட்டில் திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளும் இலக்குமிபதியானவர் திருக்கண்ணிடந்து சாத்திவழிபாடுசெய்ததிருவீழிமிழலைக்கு அரை யோசனை தூரத்தில் கிழக்குத்திக்கில் உள்ளது. அம்பர் மாகாளத்திற்கு மேற்கேயுள்ளது. அரிசில் நதிக் கரையில் விளங்குவது.

## கயிலாயவருணனை.

திருக்கயிலாயமலையில் தேவர்கள், முனிவர்கள், யோகிகள் ஞானிகள் பத்தர்கள் சூழ்ந்திருப்ப உமாதேவியாரோடு சிவபெருமான் எழுந்தருளியிருந்தனர். முற்கலன், அத்திரி, வசிட்டன், பர்க்கன், சுகன் முதலானோரும், இவர் மாணாக்கர்களும் மாணாக்கரின் மாணாக்கர்களும் திருக்கயிலாயத்தில் போய்ச் சூழ்ந்தனர்.

ஊர்வசி, அரம்பை, மேனகை முதலான கணிகை மாதரும் கின்னரமாதரும் போய்ச் சூழ்ந்தனர். இந்திரன் அக்கினி, யமன், நிருதிவருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் திக்குப்பாலகர் கந்தருவர் சித்தர் முதலானவர்களும் போய்ச்சூழ்ந்தனர். திருக்கைலையைக் காவல் செய்யும் திருநந்தி தேவர் விடை கொடுப்ப உள்ளே போய்ச் சந்நிதியில் நின்றனர்.

நின்று ஆடிப்பாடி அர! அர! அரவென முழங்கிச் சிரசின்மீது கை குவித்து வேதங்களால் துதித்து நின்றனர்.

## திரு நடனம்.

அப்போது கைலாசபதியானவர் அநாகிதை சித்திரசேனை ஊர்வசி அரம்பை முதலான தேவ கன்னிகையர்கள் பிரமதேவர் திருமால் இந்திரன் தேவர்கள் யாவரும் நன்மையடைந்து உய்யும்படி திருநடனம் புரிந்தருளினர்.

திருக்கைலைப் பெருமான் திருநடனம் புரிய அங்கே நின்று தரிசனம் செய்த யாவரும் ஆனந்தக்கடலுள் முழுகி இன்று நாம் கண்ட கூத்தை முன்னொருநாளும் கண்டிலோம். காட்சி யென்பது இதுதான் கண்பெற்ற பயனும் இதுதான் என்றார்கள்.

ஊழிதோறும் அழியாது ஓங்கிவளரும் திருக்கயிலையில் மால் அயன் இந்திரன் முதலிய இமையவர் யாவருக்கும் திருவருள் புரிந்து உமாதேவியாரோடு பரமசிவன் மகிழ்ந்து இனிது வீற்றிருந்தருளினர்.

இச்சமயத்தில் திருக்கைலையில் வாயுதேவன் யாவரும் அஞ்சும்படி வேகங்கொண்டு சுழல் காற்ருகி வீசினன் அப்போது கைலை நாதன் திருச்சந்நிதியில் நிற்போருள் ஊர்வசியின் அரையிற்கட்டிய ஆடை சிறிதுவிலகிற்று. அருகில் நின்ற பிரமதேவர் அதனைக்கண்டு அக்கணிகைமேற் காமுற்ருர்.

அதுகண்டு கோபங்கொண்டு பிரமனைப்பார்த்து நீ கணிகைமேற் காமங்கொண்டாய் அதனல் நீ இங்கிருந்து நீங்கி பூமிக்கேகுவாய் என்று கயிலைப்பெருமான் உரைத்தருள பிரமன்கேட்டு நடுநடுங்கி உள்ளம்பதைபதைத்து நெஞ்சொடு புகல்வான். இஃது என்னை மாயம்! எம்பெருமானைத் துதிசெய்து வணங்க வந்தேன் வந்தவிடத்தில் நேர்ந்ததென்னை! கண்டு மயங்கினேனே! அந்தோ! அந்தோ!! இப்பழியை எவ்விதம் தீர்ப்பேன்! யாது செய்வேன் என்று மனநொந்து கைலாய நாதனையும் கைலாய நாயகியையும் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அறியாது செய்த என் பிழையைப் பொறுத்து மன்னித்தருளல் வேண்டும் என்று பன்முறையுங் குறையிரந்து நிற்ப, எம்பெருமான் அருளிச் செய்வார்.

இன்று நீ எம்முன் ஏந்திழை போகம்விரும்பினய். அதனல் நீ பூமியிற் சென்று சிவலிங்க வழிபாடு செய்.

சிவலிங்க பூசை போலுஞ் செய்தவம் பிறிதொன் றில்லை
சிவலிங்க பூசை தானே செப்பரும் பேற்றை யாக்குஞ்
சிவலிங்க பூசை செய்தோன் திகழ்சிவ ஞானி யாகிச்
சிவலிங்கந் தன்னுட் கண்டு தைவமாய்த் திகழ்வன் மன்னே.

புண்ணியக் குடிகள் வாழும் பொன்னிநன்ஞடு தன் னில்சீர்மருவு மரிநதியின் தீரமதில் சிறந்த திலதைப் பதியில் எமக்குரிய சிவலிங்க வடிவில் நம்மைப் பூசை செய்வாயாக உன் தினமாகிய யுரோகணியில் நாம் பிரத்தியக்ஷ மாவோம் என்று அருளிச் செய்தார்.

## பிரமதேவர் மந்தாரவனத்தையடைதல்.

அப்படியேபிரமதேவர் அகமகிழ்ந்து பூமிக்கேகித்திருத் திலதைப்பதியை அடைந்து மந்தார விருக்ஷத்தின் கீழ் மன் னும் சிவலிங்கத்தைக் கண்டு மகிழ்ந்து கரங்களைச் சிரமேற் கூப்பிப் பூமியில் விழுந்து வணங்கி யெழுந்து நின்று பூசை செய்ய எண்ணினன். பூசைபுரிந்து தனது பாவத்தைப் போக்கவுந் துணிந்தான்.

## பிரமதேவர் சிவபூசை செய்தல்.

பிரமதேவர் நாயனுக்குப் பக்கத்தில் உள்ள பாணபாத தீர்த்தத்தில் சரசுவதியோடும் கணங்களோடும் விதிப்படி தோய்ந்து தன் பெயரால் ஒரு தீர்த்தம் அக்கினி திக்கில் உண்டாக்கித் தன் பாவம் போகும்படி முழுகி விபூதி யணிந்து உருத்திராக்கம் பூண்டு மந்தார விருக்ஷத்தடியில் நிலத்தை அளந்து எடுத்து நாற்கோணமாக்கிப் பூசைக் குரிய பூவும் சந்தனமும் திருமஞ்சனமும் கையில் ஏந்திச் சிவலிங்கப் பெருமானைக் கிட்டி அன்பால் அபிஷேகம் புரிந்து தூபதீபங்காட்டி, சந்தனப் பொட்டணிந்து கலன் அணிந்து இண்டைமாலை சூட்டிப் பட்டாடை சாத்திஅன்ன பானீயம் வெற்றிலை பாக்கு நிவேதித்து சோடசோபசாரம் செய்து மந்தாரலிங்கத்தை அன்போடு மும்முறைவலம்வந்து

போங்கிய திரைக்கை யேந்திப் பொன்மல ரணிந்து நாளும்
பங்கயப் பாதம் போற்று மாதிதேவ ரெங்கு மேவுஞ்
சேங்கயற் பழன வேலித் திலதையாம் பதியில் வாழுஞ்
சங்கரா போற்றி போற்றி சதாசிவ போற்றி போற்றி.



என்று கைகூப்பி எத்தி உமாதேவியைக் காணாமல் இப்பொழுது அம்மை இல்லாமலிருப்பது என்னையோ! இத்தலத்தின் இரகசியம் யாது? என்று ஆராய்ந்து நின்முன்.

ஆகாயவாணி.

பாரினைப் படைக்கும்வேத பகருதுங் கேட்பாயிந்தச்
சீருறு மாடகூடச் செழும்பதி தன்னில் அம்மை
காருடல் களங்கம் நீங்கக் கனகமந் தாரமென்னுந்
தாருவை நாட்டி மேலாந் தவத்தினைப் புரிந்தாள் அன்றே.

"ஓ வேதா! சொல்கின்றேம் கேள்! இந்தத் திருத்திலதைப்பதியில் அம்மையார் தமது உடற் கருமை நீங்கும்படி மந்தார விருக்ஷத்தை நாட்டித் தவஞ் செய்து கொண்டிருக்கிறூர்" என்றது.

மேலும் அவ்வசரீரி சொல்வது:—

முன்னொரு காலத்தில் வாலகில்லியர் சாபத்தால் வைகுண்டவாசன் மார்பில் உறையும் திருவினேடு இத்தலத்தையடைந்து சக்கரதீர்த்தமும் உண்டாக்கிப் பொற்கொடி நாயகியைப் பாகத்தேகொண்ட பெருமானைப் பூசை செய்தான்.

இந்த விஷ்ணுபாகத்தில் புற்றின்கீழ் பொற்கொடி நாயகி அமர்ந்திருக்கிருள்.

நீ தேடிப்பார்த்து எடுத்து ஆகமவிதிப்படி பூசை செய், அப்படிச்செய்தால் உனக்குப் போகமும் மோக்ஷமும் சித்திகளும் புண்ணியமும் இன்னும் விரும்பிய பொருள்களும் உண்டாகும்.

நீ அம்மையை எளிதில்காண்பாய் உன்பாவம் போகும் மெய் வரமும் பெற்று உனது உலகம் அடைவாய். என்றும் ஆகாயவாணி கூறிற்று. பிரமதேவன் அப்படியே புற்றை வெட்டிப்பார்த்துப் பொன்மேனியோடு தோன்றக்கண்டு பொற்கொடி நாயகி விரைவாய் தெரிசனந்தந்தாள் என்று, ஆகமவிதிப்படி அன்போடு பூசை செய்தான். முப்பொழுதும் நீரில் முழுகி நால்வகை மலருங் கொய்து அப்பனையும் அம்மையையும் தவருமல் பூசை செய்துவர உள்ளத்தில் அல்லாமல் நேரிலும் திருவுருவந் தோன்றக்கண்டான். தன் எண் கண்களினுலும் நேரில் தெரியும்படி கண்டான். துள்ளினன் ஆடினன் பாடினன் ஓடினன் திரும்பினன் இப்படி ஆனந்தக்கடலில் முழுகினன். வசிட்டன் பாரத்துவாசன் முதற் பலரும் சனகன் முதலான யோகிகளும் மந்தார விருக்ஷத்தின்கீழ்ச் சிவலிங்கப்பெருமானை பூசை செய்து மகிழ்ச்சி பெற்ருர்கள்.

திருத்திலதைப்பதி நித்தமாகி நிமலனுக்குரியதாகிப் பாவத்தை நீக்கி, சித்திகளும் அளித்துச் சத்தியலோகம் போல விளங்கியது.

## ஆலயம்.

பிரமதேவர் ஆலயம் அமைக்க எண்ணிப் பெருமான் திருச்சந்நிதியில் நின்று துவட்டா! துவட்டா! துவட்டா! என்று மும்முறை கூப்பிட்டார். கூப்பிடவும் அங்கே துவட்டா வர, அய்யனுக்கும் அம்மைக்கும் ஆலயம் அமைப்பாய் என்று சொல்ல அப்படியே துவட்டா அமைப்பான்.

ஆழ்ந்த அகழியும் வானோக்கி யெழுந்த மதிலும் எண் டிசையும் சூழ அமைத்து நான்கு தோரணவாயில் போக்கி பல விதிகள் மாட விதி தேரோடும் விதி என்னும் இவை களை மனத்தால் எண்ணி அலங்காரம் செய்தான்.

ஐந்து மதில் கோபுரம் வாயில் செம்பொன் மண்டபம் சபை ஆயிரக்கால் மண்டபம் வேள்விச்சாலை யாகசாலை நடனசாலை அம்மை ஆலயம் ஐயன் ஆலயம் பரிவார தேவர் ஆலயம்ஆகிய இவையெல்லாம் மணிகளாலும் பொன்னாலும் புனைந்தனன்.

இன்னும், அவன் பொன்னாலும் மணியாலும் முத்தி னாலும் மகுட முதலிய ஆபரணங்களையும் மனத்தாற் கற் பித்துக் கொடுக்கவாங்கி ஐயனுக்கும் அமைக்கும் அணிந்து யோகியாகி இதயமீது சிவலிங்க பூசை செய்தான்.

இவ்விதம் பிரமன் அந்தர் யாகபூசை புரிந்து தியானஞ் செய்தான்.

வானவர் முதுவன் பூசைக்கிரங்கி மந்தார நாதன்
கானமர் கடுக்கை தோன்றக் கங்கையும் பிறையுந் தோன்ற
மானமர் கரமுந்தோன்ற மழவிடை மிசையே தோன்றி
வானமே னின்றான் வாங்கு நுண்ணிடை யிடப்பான் மேவ.

*சதுர்முகன் பூசைக்கிரங்கி மந்தார வனேசுரன் கொன்றையும் கங்கையும் பிறையும் தோன்ற மான் அமர்ந் திருக்கும் கரமுந்தோன்ற விடைமீது தோன்றி மந்தார நாயகி இடப்பால் மேவ வானமேல் நின்றான் விண்ணவர் மந்தார மழை பொழிந்தனர். தண்ணுமை பதலை தக்கை சல்லரி குடமுழாக்கள் முழங்கின. வீணையோசை செவிக் கினிமையாக்க உள் நிறைதியான நீங்கி எண் கண்களாலுங் கண்டான் கண்டு துள்ளி மந்தாரநாதனை மலரடியில் வீழ்ந்து வணங்கித் துதித்து*

என்பிழை பொறுத்தி யேழைக் கிரங்கிச் சாத்துவிக மான
மன்பெருங் குணத்தை நல்கி மாட்சியிற் பிரம வாழ்வு
நின்பெருந் தவமா மீங்கு நிகழ்த்திய பூசைக் கான
நன்னயப்பயனுங் குன்றா நன்மையுந் தருதல் வேண்டும்.

*என் பிழை பொறுத்து இரங்கிச் சாத்துவிக குணம் நல்கி பிரம வாழ்க்கையும் நான் செய்த பூசைப்பயனும் தரு தல் வேண்டும்.*

*இத்தலத்தில் உரோகிணியில் பத்தியோடு என் தீர்த்தத் தில் முழுகிச் சிவலிங்க பூசை புரிவோர் மனைவி மக்கள் சுற்றம் சூழ இருநிதி பெற்றுப்பூமியில் வாழ்ந்து மறுமையில் நின் திருவடியை யடைதல் வேண்டும்.*

என்று வேண்ட, நாயகனும் நீ செய்த பூசைக்கு மிகவும் உவந்தோம் இங்கே நீ கேட்ட வரமெல்லாந் தந்தோம் என்று திருவாய் மலர்ந்தருளி அந்தச் சிவலிங்க வடிவத்தில் மறைந்தருளினர்.

பிரமதேவர் மறந்த சிருட்டித் தொழிலைப் பெற்று இந்திரன் தேவர் முனிவர் யாவரும் வந்து அடிமீது வணங்க கலைமகளோடு தொன்னிலைமை யெய்தி பிரமபதத்தில் வீற்றிருந்தார்.

இத்தலம் முதல் யுகத்தில் மந்தாரவனம் என்றும் இரண்டாம் யுகத்தில் ஹரி க்ஷேத்திரம் என்றும், மூன்ரும் யுகத்தில் பிரம நாயகம் என்றும், இந்தக் கலியுகத்தில் திலதருப்பணபுரி என்றும் பெயர் பெறும்.

சதுர்முகன் பூசைசெய் படலம்
முற்றிற்று.



## இலக்குமி பூசைசெய் படலம்.



மலர்மிசை யயனு மாலும் வழிபட வருள்வாய் போற்றி
திலதையாம் பதியின் மேவுந் தெய்வமே போற்றி போற்றி
அலகிலாப் புகழ் பெற்ரேங்கு மாதியே சுவணவல்லி
இலகிய விடப்பான் மன்னும் இறைவனே போற்றி போற்றி.

வியாச சிஷ்ய! சூத புராணிக! லக்ஷ்மீ என் சாபம் பெற்ருள். அவள் நாயகனேடு திலதருப்பணபுரியில் வந்து வணங்கி அடைந்தபேறு என்ன? என்று முனிவர் வேண்ட சூதபுராணிகர் பத்தியினுற் பரவசம் அடைந்து கண்ணீர் ஒழுக உரைத்தருள்வார்.

முன்னொரு காலத்தில் பாலாழியிற் பள்ளி கொள்வோன் வைகுண்டத்தில் அநந்தசயனத்தில் தையலுந் தானுமாக தேமலரமளிமீது விற்றிருந்தருளினன்.

## வாலகில்லியர் வருகை.

வாலகில்லியர்கள் என்பார் பூலோகவாசிகள், வாமனர் கள்; அந்தணர்கள்; சத்தியவான்கள். இவர்களைக்கண்டவர் யாவராயினும் சிரியாமலிரார்கள். இவர்கள் யாகஞ்செய்ய எண்ணி, அதனைக்காப்பதற்காக வைகுண்டத்தில் பகவானைக் கண்டு விண்ணப்பஞ்செய்ய, வாசல் வந்து நின்று வாயில் காவலருக்குத் தமது வருகையைத் தெரிவித்தனர்.

அம்மொழியைக்கேட்டு விஜயன் ஜயன் என்போர் அன்பு பொங்க மெல்ல ஏகித் தாதியர்க்கு உரைத்தனர். அத் தாதிமார் இறைவிக்குத்தாழ்ந்து சொல்வார். அம்மை கேள்! வாலகில்லியர்கள் வாயிலில் வந்து நிற்கின்ருர் முதல்வனைக் காணும்படி என்று வாயிலில் காவலர் நமக்கு மொழிந்தனர் என்ருர்.

இறைவி கேட்டு நாயகனைப்பணிந்து வாலகில்லியர்கள் நமது கோபுர வாசலில் வந்து நிற்கின்றனர். வந்த காரணம் யாதோ என்ன, பூமகள் நாயகன் அந்தப்புரத்தினின்று நீங்கி இலக்குமியோடு வாசலுக்கு வந்தனர்.

வாலகில்லியர்கள் அன்பின் வடிவினராகி

ஆரண முதலே போற்றி அரக்கரை யழிப்பாய் போற்றி
காரணு வெங்கள் வேள்வி காத்தருள் செய்வாய் நீயே
பூரண பொன்னம் பாவை பொலிதரு மார்பா போற்றி
நாரணு வெங்கள் வேள்வி நலம்பெறக் காப்பாய் நீயே

என்று துதித்தனர்.

வைகுண்டவாசரும் அருள்செய் காலை இலக்குமிப் பிராட்டியார் அந்த வாமனர்களின் விகாரவடிவங்கண்டு நகையாடி இகழ்ந்தனர் உடனே வாலகில்லியர்கள் கோபங் கொண்டு "நம்மை மதித்திலை இகழ்ந்தாய்! அதனல் நீ பூமிக் கேகுவாய் வைகுண்டத்தில் இருப்பதற்குத் தக்காய் அல்லை" என்று சாபமிட்டனர்.

பிராட்டியார் கேட்டு நின்ருர். ஸ்ரீமந் நாராயணன் வைகுண்டபதியானவர் அஞ்சி வருந்தினர். மனைவியைப் பார்த்து "வாலகில்லியர்கள் வஞ்சனையில்லாதவர் யாவரும் வணங்குந் தன்மையர்; நீ அவர்களைக் கண்டு சிரித்து இகழ்ந் தாய்! அவர்கள் அந்தணர்கள் நமக்கும் ஆப்தராவார் அவர் களை நீ பேதைமையால் இகழ்ந்தனை! ஆதலால் நீ வைகுண்டத் தில் இருப்பது தகுதியன்று; போ போ" என்று சொல்லி மேலும் அருளிச் செய்கிருர்.

ஆழிசூ ழவனி தன்னில் அவர் நிகர் மறையோர் யாவர்
ஊழிபே யரினும் பேரா உத்தம ரன்பின் மிக்கார்
வாழியந் தணரை யெள்ளி வைதனை யதனு னியும்
ஊழ்முறை யீங்குநின்றும் ஒழிந்திடல் வழக்கே யென்றான்.

உடனே பிராட்டியார் கொழுநனைத்தொழுது போற்றி நின்றார்.

வைகுண்டவாசன் மேலும் அருளிச் செய்கின்றார்:—

ஆணைகடந்து நாயகன் கட்டளைப்படி ஒழுகாதவள் யாவள் அவள் குலத்தை மாய்க்கும் மகளென்று சொல்வர் நீ பெரியோராகிய வாலகில்லியர்களைக் காண்பாய் அவர் பால் அன்பு செய்வாய் என்று அருளிச் செய்து, வால கில்லியருக்கும் இனிய மொழி புகன்று அந்தணரை வணங் கலும் அவர் பாதங்களைத் தலைமேற் சூடலும் மேன்மை யாகும்.

தாய் தந்தையர் சொல்லும் அந்தணர் மொழியும் குரு மொழியும் வேதவாக்கை ஒக்குமென்பார்.

வந்தனை செய்தற்கு உரிய வாலகில்லியர்களே கேளுங்கள்!

இந்த நல்ல அறங்களெல்லாம் எமக்கும் உடம்பாடே யாகும். இலக்குமியோ பரிகாசஞ் செய்து இகழ்ச்சியும் புரிந்தாள். அவள் அசுத்தமானவள்; அவளை அகற்றி விட்டோம்! நீங்களோ நான்கு மறைகளால் ஓதப்பட்ட தத்துவ ஞானம் பெற்றீர்கள்? சீரும் செல்வமும் நிறைந்த

இந்த வைகுண்டத்தில் இருங்கள்; அழகிய காவற்றொழிலையும் தொடர்ந்து செய்யுங்கள். அருந்துணையாரும் இல்லாத அஃதைக்குத் தந்தையாவீர்.

வெண்ணிறப் பூதிமேனி விளங்குற விரவப் பூசி
அண்ணல்தன் கண்ணில் வந்த வக்கமா மணியும் பூண்டே
எண்ணிய எழுத்தாம் ஐந்தும் இயல்முறைகணிப்போர்தம்மைக்
கண்ணுதற் கடவுளாகக் கருதலர் சிந்தை செய்யார்

இந்த வைகுண்டத்தில் இடம் பெறுர்கள்.

இந்திரை நும்மிடமிருந்து சாபம் பெற்று வைகுண்ட வாழ்வு நீங்கிப் பூமிக்குச் சென்ருள். என்று தாழ்ந்து நிற்ப, இலக்குமியின் துன்பமும் பூவை வண்ணன் துன்பமும் நீங்கும்படி வாலகில்லியர்கள் எண்ணிஞர்கள்.

இலக்குமி இல்லாமல் வைகுண்ட வாசனுக்கு என்ன காரியம் நடைபெறும்? ஒன்றும் இயலாதன்றே! ஆதலால் நாங்கள் இட்ட சாபம் நீங்குதற்கு உபாயம் கூறுகின்றேம்:-

பூவுலகத்தில் கருமபூமி மேன்மையுடையது. அங்கே தேவரும் விரும்பி வந்து சிவனை வழிபாடு செய்து விரும்பிய பயனைக் கைக்கொள்வார். அத்தகையகருமபூமியில் வேதாகமங்களும் அகத்தியன் சங்கமிருந்து ஆராய்ந்து தெளிந்த செந்தமிழும் வழங்குகின்ற சோழநாட்டில் திலதருப்பணபுரி யென்பது விளங்குகின்றது. அதுதான் திருவீழிமிழலைக்குக் கிழக்கே ஐந்து மயில் தூரத்திலும் திருவம்பர் மாகாளத்துக்கு மேற்கிலும் உள்ளது.

அந்தத் திலதருப்பணபுரியில் உமாதேவியார் காதலோடு பூசை செய்து தக்கன் புரிந்த யாகத்தைக் காணச்சென் றமையால் நேர்ந்த பாவத்தை நீக்கிக்கொண்டார். அந்த மந்தாரதருவின்மூலத்தில் வீற்றிருக்கும் சிவலிங்க மேன்மை சொல்ல முடியாது.

இந்தப்பூவுலகத்திலும் விண்ணுலகத்திலும் நாகலோகத் திலும் மந்தாரவனத்தின் புகழ் நிறைந்திருக்கின்றது. அம்பி கையும் தவஞ்செய்த இடம். நீயும் உருத்திராக்ஷ வடிவ முள்ள சிவலிங்கத்தைப் பன்னிரண்டு வருடம் கவுரி தீர்த் தத்தில் நாடோறும் தோய்ந்து பூசை செய்து சாப நீங்கித் திருமகளோடு வேண்டிய வரங்களும் பெற்று வைகுண்டத் திற்கு வந்து சேர்க அங்கேயுள்ள பொற்கொடி நாயகி சமேதரராய் விளங்கும் மந்தார நாதன் பெருமையை யாவர் அளவு செய்து சொல்ல வல்லவர்.

ஆதலால் முகுந்தனே! நீயும் சிவனடியார்களில் முதல் வன் அல்லவா? உமையொரு பாகத்தானையும் மறையவரை யும் வேற்றுமை செய்யாமல் நாடோறும் தியானஞ் செய்து பூசை செய்வாய்.

நாங்கள் இங்கே வந்த காரணம் யாதோ என்னில் :—

மந்திர வேள்வியை மரபின்
எந்தை! யாம் செய்குலம் இனிதின்
சிந்தும் அரக்கரைச் சினந்து
வந்தனை காக்குதி வள்ளால்! 46

என்றவர் வேண்டலும் இசைந்து
சென்றனன் மகத்தினைச் சிறிதுந்
துன்றிடர் புகாவகை தொலைத்து
நன்றுறக் காத்தனன் நாடி. 47

கறைமிடற் றிறைவனைக் கருதும்
மறைபுகல் வேள்வியை மரபால்
நிறைபெற முடித்தனன் நெடியோன்
குறைவறு தவர்மகிழ் கொண்டார். 48

மகவினை முற்றிய மாலும்
தகவுறு திருவொடு தானும்
மிகுதில தைப்பதி மேவ
அகமிசை கொண்டனன் ஆர்வம். 49

நாகணை மால்புகழ் நாலேழ்
ஆகம மோர்வடி வானோன்
ஏகனை நெஞ்சகத்து எண்ணி
ஓகையொடு அவனியை உற்றான். 50

வைகுண்டவாசன் இலக்குமியோடு வைகுண்டத்தை விட்டு நீங்கிப் பூமியில் வந்து, திருக்கேதாரம் பணிந்து சிவ தலங்கள் பலவற்றையும் தரிசிக்கும் விருப்பத்தோடு நைமிசாரண்ணியத்தை வணங்கி, காசியை யடைந்து கங்கையில் மூழ்கி விசுவேசனை விசாலாட்சியை வணங்கி மகிழ்ச்சி பெற்றான்.

கங்கை காளிந்தி சரஸ்வதி என்னும் மூன்றும் கலந் துறையும் பிரயாகையிற்சென்று தோய்ந்து துணைவியோடு

சிவலிங்கம் வழிபட்டேத்தி வேறு பல சிவ தலங்கடோறும் சென்று வணங்கித் தோத்திரஞ்செய்து திருப்பருப்பதம் வணங்கி, வானவர்கள் அகலாமல் உறையும் பொன் முக லித் தென்கைலை கண்டான்.

தென் கைலைமலையில் திகழ்கின்ற ஒளிப்பிழம்பைத் தெவிட்டக்கண்டு பலகாலுந்தொழுது போற்றி விடை பெற்று நீங்கி, மழைபொழியும் மதில்சூழ் காஞ்சி நகரஞ் சென்று மலைவல்லி முலைத் தழும்பும் வளைத்தழும்பும் மருவு திருமேனிப் பெருமானை வணங்கிப் போற்றி, வேறு பல தளிகளையுந் தொழுது ஆனந்தநடனம் புரியுந் திருத்திலை தொழுது போற்றி ஆங்ககன்று திருக்குடந்தைக்கேகிப் பெருமானை வழிபாடு செய்து அப்பாலேகி,

இவ்வணந் தலங்கடோறு மிறைவனை வணங்கிப் போற்றிக்
கைவணத் திலநீர் கோண்டு கனிவுடன் பிண்ட மீய
மைவணக்களத்தெம் மண்ணல்மகிழ்ந்துறைதிலதையேன்னுஞ்
சேவ்வணப் பதியைக்கண்டு திருவுடன் களிப்புக்கோண்டான்.

அரிசில் நதிக்கரையில் இருக்குந் திருத்திலதைப்பதியின் எல்லைகண்டு வணங்கிப் பதியுள் புகுந்து இறைவன் ஆல யங் கண்டு நீரில் தோய்ந்து விபூதியணிந்து உருத்திராக்கம் பூண்டு அன்போடு சந்தனம் தீபம் புஷ்பம் முதலான திரவி யங்களை கையில் ஏந்திக் கோவிலை யடைந்து நாயகன் முன் வந்து தருநிழல் இருக்கும் லிங்க மூர்த்தியை ஆகம விதிப் படி அபிஷேகம் செய்து தூபதீபம் காட்டி சந்தன திலகம் அணிந்து நவமணிக்கலன் அணிந்து இண்டை சூட்டி

அன்னம் பானீயம் வெள்ளடைகாய் நிவேதனஞ் செய்து தூபதீபம் சோடச உபசாரம்புரிந்து சிவபூசையை முடித்து மும்முறை வலம்வந்து நிலமிசை வணங்கி நின்று,

அங்கணு அகண்டா னந்தா அருமறை புகழ்ந்து போற்றும்
பொங்கர வணிந்த வாதிப் புராணநா யகனே போற்றி
சங்கரா சுவண வல்லி சமேதனே திலதை வாழும்
எங்கள்தம் பிரானேபோற்றி யிறைவனே போற்றி போற்றி.

என்று கைகளைச் சிரசின்மீது குவித்துப் போற்றி செய்து பூசையை முடிக்க நாயகன் மகிழ்ந்தார். இவ்வாறு நாடோறும் நியமத்தோடு சிவ பூசை செய்துவரப் பன்னிரண்டு வருடங்கள் சென்றன. வாலகில்லியர் இட்ட சாபமும் பக்குவம் எய்தி அகலும் பருவம் நண்ணியது. மந்தாரநாயகன் சிவலிங்கத்தினின்று வெளியாகி வானமீது வெள்விடைமேல் மதியணிந்த செஞ்சடைமேல் கங்கை தோன்ற உமையொருபாகந் தோன்ற, கரமீது மானும் மழுவுந்தோன்ற, தோன்றி காட்சி கொடுத்துக் கண்ணனை நோக்கித் திருவாய் மலர்ந்தருளுவார். மாயனே! நீ செய்த பூசைக்கு மகிழ்ந்தோம். நின்பாவமும்விலகியது. உனக்குத் தரிசனந் தந்தோம் என்று மந்தார நாயகர் உமையாளோடு சிவலிங்கத்தினுள் புகுந்து மறைந்தருளினர்.

திருமகள் சாப நீங்கிப் புனிதையாக அந்த இலக்குமிப் பிராட்டியாரோடு அப்பதியில் வசித்துப் பாவம் நீக்கிய சிவலிங்கத்தை விதிப்படி பூசை செய்து அந்த லிங்கத்துக்குத் தென் திசையில் தன் பெயரால் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டைசெய்து வழிபாடுசெய்து மேற்குத்திக்கில் தடாகம் தோண்டி அதற்குச் சக்ரதீர்த்தம் என்று பெயரிட்டு ஈசன்

திருவடிகளை வணங்கி நினைவை அத்திருவடிகளில் இருத்தி அன்பினோடு தேவியும் தானும் விடைபெற்றுக்கொண்டு வைகுண்ட லோகத்திற் சேர்ந்தார்.

மாதவன் பிரதிட்டை செய்து வழிபாடு புரிந்த மாதவ லிங்கத்தைத் தரிசித்தபேர்களும், சக்ரதீர்த்தத்தில் தோய்ந்து பாதகந்தீர்த்த லிங்கத்தைத் தரிசித்தோரும் போகம் மோட்சம் என்னும் இரு பயனையும் அடைவார்கள்.

வைகாசி மாதம் பூரணைத்திதியே மாதவன் சிவலிங்கப் பிரதிட்டை செய்த நாளாகும். அத்தினத்தில் ஈசனைத் தரிசித்து வணங்கினனேல் அவன் தன்னை வருத்தும் சாபத்தால் வந்த துன்பம் நீங்கி வாழ்வான்.

மேற்கூறிய வைகாசி மாதத்தில் விடிய ஐந்து நாழிகையில் எழுந்து விதிப்படி ஸ்நானஞ் செய்து சந்தியாவந்தனம் செய்தவனும் உபாசனைசெய்தவனும் வைகுண்டவாழ்க்கை யனுபவித்துப் பின்பு சிவபெருமானது திருவடிநிழலை அடைவார்கள்.

மேற்கூறிய வைகாசி மாதம் முப்பதுநாளும் மேற்படி தீர்த்தத்தில் முழுகினவன் தேவவிமானத்தில் ஏறி, தேவ மாதர் நடித்துப் பல்லாண்டு கூற பலவகையுலகமெங்கும் போய் அங்கங்குள்ள விநோதங்களைக் கண்டு பின்பு சிவ பெருமானுடைய திருவடி நிழலையடைந்து சுகமாய் வாழ்வான்.

இலக்குமி பூசைசெய் படலம் முற்றுப்பெற்றது

---

# அம்பிகைப் படலம்.

உலகமு முயிரு மீன்ற வுமையொரு பாகா போற்றி
அலகிலா மறைக ளாலு மறிவதற் கரியாய் போற்றி
திலதருப் பணப்பேர் கொண்ட திருப்பதிக் கரசே யெங்கள்
குலவுபொற் கொடியா மம்மை கொழுநனே போற்றி போற்றி.

1. *அம்பிகை என்ன துன்பம் அடைந்தாள்?*

2. *அப்பெருமாட்டி திருத்திலதைப்பதிக்கு வந்ததற்கு ஏது என்ன?*

3. *திலதைநாதன் மலரடிப்பூசை செய்து அடைந்த பேறு என்ன?*

இவைகளை எங்களுக்கு விளங்கும்படி உரைத்தருள வேண்டுமென்று சௌனகர் முதலான முனிவர் கேட்க சூதபுராணிகர் விரித்துக்கூறுகின்றார்.

## தக்கன் யாகஞ்செய்தல்.

உலகத்தில் உள்ளவர்களில் இந்த அத்தியாயத்தை யாவர் படிக்கக் கேட்டாலும் அவர்கள் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குறும்பும் நீக்கி ஞானத்தைக் கொடுக்கும் கதை நிறைந்த அத்தியாயமாகும். ஆதலால் சவுனகாதி முனிவர்களே! கவலையின்றி மனத்தை ஒருவழிப் படுத்திக் கேளுங்கள் என்று சூதபுராணிகர் சொல்லு கின்றார்:—

கொன்றைப்பூமாலையை அணிந்த திருச்சடையை யுடைய கண்ணுதற் பெருமான் வாழ்கின்ற வளந்திகழ் கயிலையென்னும் மலையானது வெண்மதி யொருகோடி உதித்தாற் போலத்தோன்றும். புண்ணியன் வடிவம் புண்ணியம்; அவன் பூசும் நீறும் புண்ணியம்; அவனை நினைக்கும் அன்பரும் புண்ணியர்; அவன் இருக்கும் இடமும் புண்ணியம் என்று எண்ணும்படிவிளங்கும் அம்மலைதான் மந்திர மறைமுழக்கும் மேகமுழக்கும் என்றும் மாறுமல் இருக்கின்ற அக்கைலாய மலையில் நடுவில் பொன்மேரு வந்திருந்தாற்போல அழகிய கோயில் ஒன்று பொலிந்து விளங்கா நிற்கும். அக்கோயிலில் சிகர முதலானவை முத்தினுலும் வயிரத்தினுலும் மாணிக்கத்தினுலும் மரகதத்தினுலும் வயிடூரியத்தினுலும் செய்யப்பட்டு அழகாய் விளங்கும். அவ்வாலயத்தில் நடுவில் புதிய மணிகள் பதித்துச்செய்த உறையுள் ஒன்று விளங்கும். மணிகளாற்செய்த மண்டபத்தில் சிங்காசனத்தில் இடப்பாகத்தில் உமாதேவி இருப்ப ஈசன் நன்கு வீற்றிருந்தருளினுர்.

நான்மறை யொலி விஞ்சையர் வீணையொலி தண்ணுமை முழக்கம் அரம்பைமாதர் பாடி ஆடும் ஒலி கைலாய மலையில் எங்கும் நிறைந்து விளங்கும். தக்ஷன் செய்த தவத்தினுல் அவனுக்குக் குமாரத்தியாகித் தோன்றி முக்கண் முதல்வனுக்கு மனைவியாகித் தன் நாயகனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை யெல்லாம் முறைப்படி செய்து கைலையங்கிரியில் பேரின்பத்தோடு இருந்தாள்.

மங்கையின் பிதாவாகிய தக்ஷன் பெருஞ்செல்வனுகி பிறைசூடியை திருமகள் கணவனைப் பங்கயன் முதலான

தேவர்களை இகழ்ந்து கங்கைக் கரையை அடைந்து கறுவங் கொண்ட சிந்தையனாய் ஒரு யாகஞ்செய்தான். வலிமையுள்ள தக்ஷன் சொற்படி வணங்கி ஏற்று நின்று யாகஞ் செய்தனர் தேவர் யாவரும்.

நாரதர் திருக்கயிலைக்கேகிக் கைலாசபதியை வணங்கி கங்கைக்கரையில் தேவர்களோடு ஒரு யாகஞ் செய்வதைக் கண்டேன் என்றார். இஃது ஒரு புதுமை. எம்பெருமானே! என்றும் நாரதர் கூறினர். பக்கத்திலிருந்து கேட்ட அம்மை தக்ஷன் செய்யும் யாகத்தைக்காண ஆசை கொண்டாள். தன்னைப்புத்திரியாய்ப்பெற்ற தக்ஷன் தன்னை அழைத்திலன். தன் கணவனை மதித்திலன், தன் செல்வம் அதிகாரம் என்னும் இரண்டையும் நினைத்து இறுமாந்து தன்னையும் இகழ்ந்துவிட்ட தக்கன் மீது அன்புவைத்து மேல் நடக்கும் காரியங்களை ஆராய்ந்துபாராமல் ஈசனது இடப்பாகத்தினின்று நீங்கிச் சொல்வாள். "பிராணநாதா

மாசுறு மனத்த னாகி மதித்திலன் எனினும் எந்தை
பாசமே உடையேன் வேள்வி பார்ப்பதற்கு எண்ணமுற்றேன்"

பிராணநாதரே! தேவரீர் அந்த யாகங்காண வருவது முறைமையன்று ஆயினும், அந்த யாகத்தை நான்போய்க் காண அநுமதி தருதல் வேண்டும். என்று வந்தனை செய்து நின்றாள்.

ஈசன் மறுத்து மானே! சிந்தனை செய்தி, அங்கே நீ போகவேண்டாம் என்றான்.

இறைவன் மறுத்துக்கூற, உமை: " தக்ஷன் சிறிதும் அறிவிலன், அவன் என் பிதா, முன்னுள் என்னை அன்போடு பிறைமதி போல வளர்த்தவன்; அவன்செய் பிழையை எண்ணுதே. கருணையங்கடலே! கும்பிட்டேன் உத்தரவு தருவாயாக " என்று வணங்கி நின்ருள்.

உமையாள் இவ்வாறு கூறி நிற்ப, கைலாசபதியானவர் "வலியனுய்த் தக்ஷன் செய்யும் வேள்விச் சிறப்பைக்காணும் ஆசையுடையாயேல் நீயே விரைந்து செல்வாயாக" என்றனர்.

பெருமான் அருமையாய் விடை கொடுக்கப் பெற்றுக் கொண்டுஅந்நாயகன்திருவடியில்வணங்கி அவ்விடத்தினீங்கி மரகதவல்லிபொன்மலையில் இருந்தாற்போலபொன்விமானத்தில் வீற்றிருந்தாள். சுமாலி மாலினி என்னுந் தாதிமார் கவுரி பாங்கர் மதிக்குடை தாங்கி நின்றனர். கன்னியர்கள் கையிற் கவரி எந்தி இரட்டினர். சேடியர் மருங்கு சூழ விமானமீது எறி அம்பிகை இனிமையாகச் சென்று யாக சாலையை நண்ணும்போது தக்ஷன் கண்டு மகளைக் கோபித்துச் சொல்வான்:—

"தந்தையுந் தாயுமில்லான் தகவுறு சுற்றமில்லான் முந்திய அகந்தை கொண்டான் மொய் பிணச் சுடலையாடி சிந்தையினுவக்கு மன்பிற்றேவியா நீயும் ஈங்கு வந்தது என்கொலோ வா என்று அழைத்தவர் யாவர்" என்றான் மங்கையும் மனம் பொருமல் சொல்வாள்: நீ மாமன் என்ற முறைமையை நினைந்து சங்கரன் பெருமையை நினையாமல்

குறை கூறினுய். என் தங்கைமாருக்குச் சீர் செய்தாய் எங்களே மதித்திலே, அந்தோ! என் இது செய்தாய் என்றனள் விமலே.

பின்னர் ஒன்றும் பேசாமல் கோபங்கொண்டு சாப மிட்டு, கணவனிடம் செல்ல அஞ்சி நின்ருள். தாக்ஷாயணி என்று என்னேச் சாற்றுவதும் ஆகாது என்று நினேந்து பெருமைவாய்ந்த இம்ய பர்வதத்தை அடைந்து தவஞ் செய்வாளாயினள்.

கைலாசபதி நிகழ்ந்தவைகளே யறிந்து வீரபத்திரனுல் தக்கன் வேள்வியை யழித்து அதைச்சேர்ந்த தேவருக்கும் உரிய தண்டனே புரிந்து கைலேயில் இருந்தார்.

அம்பிகை இமயத்தில் ஓரிடத்திலிருந்து மாதவஞ் செய்து பரமனேத் தியானஞ்செய்து தன் கணவனே விவாகஞ் செய்து கொண்டாள்.

பலகாலஞ்சென்ற பின் இறைவன் ஓர் திருவிளேயாடலே எண்ணி “மலேராஜன் புத்திரியாகி நம்மை நீ மணந்தனே யெனினும் தக்கனுகிய தந்தைமீது பேரன்பு வைத்து அவன் வேள்வியைக் காணச்சென்ருய் மானே! நீ நமது சொல்லே எற்ருய் அல்லே. அதனுல் வந்த பாவம் மலேபோல ஓங்கும்; அந்தப்பாவத்தை நீக்கும்படி நம்மை நீ பூசை செய்வாயாக.

உத்தமதலத்தில் உத்தம பூசையைப் பத்தியாற் செய் தால்தானே பயனுண்டாகும், பாவநீங்கும், பரிசுத்தமும் உண்டாகும். இப்பொழுது அவ்விதமான ஒரு தலத்தைக்

கூறுகின்றேம்:— புண்ணிய பூமியாகிய புவியில் பெருமை வாய்ந்த மேருவின் தென்பால் நாவலந்தீவில் விண்ணவரும் வழிபாடுசெய்து வரம்பெற்ற பழம்பதி திருவீழிமிழலையாகும்.

அதன் கீழ்பால் அரையோசனை தூரத்தில் மந்தார தருவை நாட்டி அத்தருவின் மூலத்தில் தியானயோகம் செய். பலகாலத்தின் பின் சிவலிங்க வடிவந்தோன்றும், பத்தியினுலே அது தோன்றும் வரையும் குற்றமில்லாமல் தவஞ்செய். செய்தால் சித்த சுத்தியுண்டாம். சத்தியே! நீ அத்தலத்தை யடைந்து பூசைசெய். நாம் அங்கே வந்து நின் பூசைகண்டு அருள் செய்வோம் என்று திருவாய் மலர்ந்தருளினன்.

## அம்மை சிவபூசை செய்தல்.

நாயக னருளிச் செய்த நலம்பெறு தலத்தை யண்மித்
தூயமந் தாரமென்னுந் தோன்மைசேர் தருவைத் தாபித்து
ஆயநற் றருவின் பாங்கர் அரியதோர் தீர்த்தங் கண்டு
வாயுவை யருந்தி யம்மை வான்றவஞ் செய்தாளன்றே.

நெஞ்சில் கணவனை நினைந்து ஐந்தெழுத்தையும் தனது நாவில் அழுத்தி அரிய தவஞ் செய்யத் தருமூலத்தில் சிவலிங்க வடிவம் வளர்ந்து எழுந்தது.

தரணி முதல் பாதாளம் வரையும் உருத்திராக்க வடிவமாகி உயிர்கள் வாழும்படி முளைத்தெழுந்த சிவலிங்க வடிவ முழுதும் அம்மை தரிசித்து ஆகம விதிப்படி பூசை செய்து

தக்கன் புத்திரியெனும் பேரை மாற்றிப் பெருமானுடைய வாம பாகத்தில் முன்புபோல் வீற்றிருந்தாள்.

இப்படியான மந்தாரவனத்தில் சிவலிங்கப்பெருமானை முனிவர்களோடு நாமும் முன்னாளில் வழிபாடு செய்தோம் என்று சூதமுனிவர் சொன்னார்.

யாகம் செய்வோரும் யோகம் புரிவோரும் அட்டாங்க யோகியர் ஐந்தீ நடு நிற்போர், கருமயோகியர் சிவபூசை புரிவோர் நந்தவனம் வைப்போர் ஐம்மகம் புரிவோர் வேதாந்தங் கூறுவோர் கேட்போர் இறைவன் திருவிளை யாடல் கூறுவோர் கேட்போர் அத்தலத்தில் வசிப்போர் ஆவார். இத்தலத்தில் தவஞ்செய்தலே முத்திக்கேதுவாகும்.

## மந்தாரவன நாயகர் அந்தணராய் வருதல்.

அப்பதிக்குடிகளாகும் அந்தணர்கள் நான்கு வேதம் ஆறங்கம் அறிந்து எரியோம்பி வாழ்பவர்; மூவுலகத் தாரும் போற்றும் மந்தாரலிங்க பூஜை செய்யும் பக்தர்கள். இல்லாளோடு கூடி இல்லறம் புரிந்து வாழ்ந்து விருந்தினர்ப் புரத்தற்கு எண்ணும் குணமுள்ளோர் திருத்திலதைப்பதி யுறையும் அம்மையப்பரையே பற்றி வாழ்வோர்.

இத்தகையாரில் ஒருவர் பிறந்த இப்பிறப்பிலேயே நற்பயனெய்த பலநாள் பூசைசெய்து இருக்கும்போர்து ஒரு தினத்தில் ஆதிசைவர் ஒருவர் ஆலயத்தில் அர்த்த ஜாமப் பூசை முடித்துப் பத்து நாழிகையின்மேல் தமது பன்ன சாலைக்கு வந்தார்.

அப்போது மந்தாரவன நாதர் அந்தணர்போல் திருமேனி கொண்டு மழையில் நனைந்து பசியினால் வருந்திப் பன்னசாலையில் நுழைந்தார், நுழைந்து நின்று சொல்வார்:-

உள்ளே யிருக்கின்றவர்களே கேளுங்கள்! இருள் நிறைந்த நடு ராத்திரியில் மிகு பசிக்கு உணவு தாருங்கள். உடுப்பதற்கு ஆடை தாருங்கள். மழைக்கு இடந்தாருங்கள் என்றார்.

இம்மொழி கேட்டு உள்ளிருந்த ஆதிசைவர் விரைவாக எழுந்து ஓடிச்சென்று வாயிலைக்கிட்டி மழைக்கு என்ன செய்தீர்; வாரும் பெரியீர் நீர் இங்கே வருவதற்கு நான் எப்பிறப்பில் என்ன தவஞ்செய்தேனோ அப்புண்ணியம் இப்பொழுதுதான் பலித்தது என்று, கொண்டு சென்று உள்ளே புகுந்து குசைமிசையிருத்தி மேனிமண்டிய ஈர மாற்றி மாசு அறும் ஆடை சாத்திப் பண்டைய வன்பு பொங்கப்பதமலர் விளக்கி யேத்தித் தொண்டரை அமுதூட்டத் தொடங்கினர் என் செய்வாரே. தாம் உண்ண வைத்திருந்த சாகவமுதை முன் வைத்து "ஐயரே! இதனை உண்மின் எனவேண்ட ஓம் என்று மகிழ்ந்து உண்டார் போல் உறுபசி நீங்க உலகமும் பசி நீங்கி மகிழ்ந்தது.

திருத்திலதைப்பதியில் முளைத்த பாசிலை கொய்து சமைத்த உணவை அருந்தினோர் அறுசுவை நால்வகை யுணவையருந்த வரும்பேறு அடைவார். நால்வேதம் ஆறங்கம் கற்ற புனிதருக்கு அன்னதானஞ் செய்யவரும் பயன் நம்மால் இயம்பலாமோ; அமுது செய்தோர் சுவர்ண வல்லி சமேத மந்தார நாயகர் திருவடியை அடைவார்.

அன்றிச் சிவஞானமும் பெறுவார். பூதலத்தில் மந்தாரவனம் போல் தலம் வேறு இல்லை. தேவரும் துன்பம் வந்தபோது இங்கேவந்து வாசம்செய்தும் மந்தாரவனநாயகரைப் பூசை செய்தும் துன்ப நீங்கித் தமது உலகம் செல்வார். ஆதலால் நாம் சொன்ன எல்லாம் சத்தியம் என்று அறிவீராக.

அம்பிகைப் படலம் முற்றிற்று.

---

## நற்சோதிகன் யாத்திரைப் படலம்.

சூதமுனிவர் சவுனகாதியருக்கு நற்சோதிகன் யாத்திரை செய்த காதையைக் கூறுகின்றார்:—

கோதாவரிநதி தீரத்தில் போகவதி என்னும் பட்டணம் ஒன்றிருக்கிறது. அதைக்காக்கும் அரசன் பெயர் தேவவர்மன் அவன் தேவர்களிடம் பத்தியுள்ளவன். சிவபெருமானை மூன்று காலத்திலும் தரிசித்து வணங்கும் ஒழுக்கம் பூண்டோன். அமாவாசை வியதீபாதம் பூரணை அயனம் விஷு தாய் தந்தையர் சிராத்த தினம் பிறந்த நாள் வந்தால் உவந்து தான தருமங்களைச் செய்வான். சொன்ன விசேட தினங்களுக்குத் தக்கவாறு குரவரையும் அதிதி அப்பியாகதரையும் இருடிகளையும் திருப்தி செய்து கன்னிதான முதலியவைகளைப் பெரியோருக்கு ஈந்து சந்தோஷங் கொள்வான். புண்ணிய காலந்தோறும் உரிய தானங் கொடுப்பான்.

இவ்வாறு அரசன் இம்மை மறுமைக்குரிய புண்ணியங்களைச் செய்து வருநாளில் அவனுக்கு நான்கு புதல்வர் பிறந்தனர்:—

மூத்த புதல்வன் சுஜ்ஜோதிகன், இரண்டாவது புதல்வன் பேர் கோடி பதகன், அடுத்தவன் பேர் முனி சிரேட்டன், இளையவன் பேர் வேதமித்திரன். இந்நால்வரும் வில் வித்தை யானையேற்றம் குதிரையேற்றம் முதலிய அரசர்க்குரிய வித்தைகளில் கைதேர்ந்து விளங்கினார்கள்.

புதல்வர் நால்வரும் அரசர்க்குரிய குணங்களாற் சிறந்து விளங்கினர். மனு நெறிப்படி பாரை ஆளும் விருப்பமிக்காராய் இருப்பதை அரசனாகிய தந்தை கண்டு அவர்களுக்கு மணஞ்செய்பருவம் வந்தமை கண்டு மதியப்புத்தேள் வழிவந்த மன்னர் தம்மால் கன்னியர் இருப்பதைக் கேட்டு மணம் பேசி விவாகஞ்செய்து வைத்தான்.

பின் உலகநிலையாமையை நினைந்து மூத்த குமாரனுக்கு அரசுரிமையை ஈந்து வனத்திற்சென்று மனைவியோடு தவஞ்செய்து பின்பு இவ்வுலகைத் துறந்தான். அவன் மனைவி தருமசீலையும் நாயகனோடு அனுகமனஞ்செய்தாள் சுஜ்ஜோதி ராசன் தன் தம்பிமாரோடு ,தாய் தந்தையர் தகனக்கிரியை முடித்துப் புகழ் பெற்றான். உலகத்தார் அவனை புகழ்ந்தனர் நாரத முனிவர் சுஜ்ஜோதி ராசனைக்கண்டு,

" இறந்தநுந் தந்தைதாயர்க் கியற்றிய பிதிரர் கன்மம்
அறந்தவா வகையிற் செய்தீர் அச்செயல் கண்டு வந்தோம்
சிறந்தவர் நீரேயாவீர் சேகத்தினில் உம்மை நேர் ஆர்
மறந்திடா வகையிற் கேண்மின் மாநில வேந்தர் நீரே.

எத்தலத்தில் பிதிரர்கள் திலநீர் பிண்ட தானத்தை எதிரே நின்று யாவரும் காணும்படி ஏற்பார்களோ? அத்தலந்தான் பூமியில் உத்தமமான திருத்தலம் என்று அறியுங்கள். தென் புலத்தார் திலதருப்பணத்தாலும் பிண்ட தானத்தினுலும் சந்தோஷப்படுவார்கள் என்று பெரியோர் சொல்வார்கள்.

நீயிர்க ளின்னுங் கேண்மின் நெடுந்தகைப் பிதிரர் தாமும்
தூயதோர் பிண்ட தானந் தொகுதில நீரை யேற்று
மேயவர் எவருங் காண விரும்பினர் உண்பார் என்னின்
ஆயதோர் தலமே கண்டீர் அவனியில் பெரியதாம் ஆல்.

அந்தத்தலத்திற்குப்போய் நும் பிதிரர்களைத் திலதருப்பணத்தாலும் பிண்டதானத்தாலும் மகிழச் செய்யுங்கள் இதனைக்கூறும் பொருட்டே உம்மிடம் நாம் வந்தோம்.'' என்று நாரதர் சொல்லி விடை பெற்றுக்கொண்டு போய் விட்டார்

பின், அரசன் எங்கள் குலகுருவைக்கேட்டு அவர் சொன்னபடி செய்வோம் என்று எண்ணி, அவரை நினைக்க அந்த அக்கினிகர்ப்பர் கருணையோடு மன்னனிடம் வந்தார். குருவைக்கண்டு அரசன் வணங்கி நின்றுன். பிரமனைப் போலும் அவ் வக்கினிகர்ப்பர் அரசன் எண்ணங்களை யெல்லாம் ஞானத்தால் அறிந்து "மன்னனே! கேள். நீ இப்போது யாத்திரை செய்ய நினைத்தாய் அது நன்மையான காரியம். அப்படியே செய்'' என்றுர்.

அவர்மகிழ்ந்துகூற வேந்தனனவர் அந்தணர்களுக்குத் தானம் செய்து, புரோகிதர் அமைச்சர் சான்றோர் வேதியர் முனிவர் முதலானோர் சூழ்ந்துவரப் பிரயாணம் புறப்பட்டான். வேதவந்தணர் மூவாயிரவர் புரோகிதர் குருகுல வாசஞ் செய்வோர் சதானந்தர் முதலாகக்கூறும் பெரியோர் அரசனோடு சென்றார்கள். அரசன் நால்வகைச்சேனையுடன் புறப்பட்டுத் தனது திருநகர்கடந்து நாடுகள் பல கடந்து காசியையடைந்து கங்கையில் விதிப்படி ஸ்நானஞ் செய்து நித்தியக்கடன்முடித்து விசுவநாதனைப் போற்றி, தருப்பணத்தாலும் பிண்டத்தினலும் தானத்தினலும் பிதிரர்களை மகிழ்வித்தான்.

பின்பு, அரசன் காசியை விட்டு நீங்கி பல க்ஷேத்திரங்களிலும் போய் விதிப்படி யாவும் செய்து பதரி நாராயணம் நேபாளம் கோகுலம் கௌரிகுண்டம் அவந்தி மாயா நீலகண்டம் மேற்படு திருக்கேதாரம் என்னும் தலங்களை வணங்கி, திரும்பி இருஷிகேசம் அரித்துவாரம் அநேக தங்காவதம் திருப்பருப்பதம் மற்றும் தலங்களும்கண்டு வணங்கி பின், திருக்காளத்தியில் போய், பொன் முகலியில் ஸ்நானஞ் செய்து, வேதியர்களுக்குப் பலதானங்களும் மகிழ்வோடு கொடுத்து, காஞ்சிபுரம் அருணசலம் விருத்தகிரி தில்லைவனம் முதலானதலங்களையடைந்து வணங்கி ஸ்ரீமுஷ்ணம் திருவெண்காடு சாயாவனம் முதலான பல தலங்களை வணங்கி, காவேரி தீர்த்த மகிமையையுடைய மாயவரத்தை அடைந்தான்.

நீரின் மேன்மை விளங்குகா
வேரி தீரம் விழுத்தகும்
ஊரின் மிக்கம யூரமா
சீரின் மேற்பதி சேர்ந்தனன்.

அக்கீசுரம் கோடீசுரம் திருவிடைமருதூர் என்னும் தலங்களை அடைந்து வணங்கித் துதித்துப் பின்னர் கும்ப கோணத்தை அடைந்து காவேரியில் ஸ்நானஞ்செய்து தர்ப் பணமும் விதிப்படி செய்தான். அரிய தர்ப்பணம் செய்தும் பிதிரர் நேரே என் கண் காண திலோதகம் பிண்டதானம் முதலானவற்றை வாங்கி உண்டிலர் என்று மனம் வருந் தினன். அப்பொழுது நாரத பகவான் அரசன் முன் வந்து தோன்றினர் தோன்றி அரசனுக்குச் சொல்வார். மன்னனே! கேள் உனது பிதா சற்குணன் அப்படியிருந்தாலும் பிதிரர் கள் எல்லாத்தலங்களிலும் தோற்றமாட்டார்கள். தோற்ற வேண்டிய இடத்தே தான் அப்பிதிரர்கள் தோற்றுவார்கள்.

அத்தலம் யாது எனில் கிழக்கே திருநாகேசுரம் இருக்கிறது. அப்பால் திருவிழிமிழலையையும் மந்தார வனத்தையும் வணங்கல் வேண்டும். மந்தார வனத்தில் விசேடமான தீர்த்தம் இருக்கிறது. அதில் தோய்ந்து பிதிரர் களைப் பூசை செய்தால் அவர்கள் தோன்றி முன்னிற்பார் கள் என்று சொல்லி விட்டு நாரதர் சேதுவை நோக்கிச் சென்றார்.

அரசன் பகீரதி யமுனை முதலான புண்ணிய தீர்த்தங் களில் ஆடிய பயன் கைகூட இரகசியமான பதி தோன் றும் என எண்ணிப் பிரயாணஞ்செய்தான்.

நற்சோதிகன் யாத்திரைப் படலம் முற்றிற்று.

---

# நற்சோதிகன் தருப்பணஞ்செய் படலம்.

கங்கையை மதியைப் பாம்பைக் கடுக்கையை முடியிற்சூடி
மங்கையை யிடப்பால் வைத்து மகிழ்ந்தவன் மணிநீர் வாவி
தங்கியதிலதை யென்னுந் தலமிசைக் கோயில் கொண்டோன்
பங்கயம் புரையுஞ் செய்ய பாதங்கள் போற்றி போற்றி.

நற்சோதி வேந்தனவன் திருத்திலதைப்பதியை யடைந்து பிண்டமிட, பிதிரரானோர் சிவலிங்கத்திலிருந்து தோன்றி யாவரும் காணும்படி வாங்கியுண்டு மகிழ்ந்த மான்மியத்தை இனிக்கூறுவோம்.

சூதபுராணிகரே! நற்சோதிகன் சரிதம் முழுவதையும் சொல்லுதல் வேண்டும் என்று சௌனகாதியர் கேட்கச் சூதமுனிவர் சொல்கின்றார். நம்மிடம் பல புராணங்களையும் அன்போடு கேட்ட மாதவர்களே! கேளுங்கள் என்று சூதமுனிவர் சொல்கின்றார்.

நற்சோதிவேந்தன் கும்பகோணத்தில் காலையில்எழுந்து காவேரியில் ஸ்நானஞ்செய்துநியமங்களை முடித்துக்கொண்டு குல குருவோடும் பரிவாரங்களோடும் தேர் மேலேறி வழிக் கொண்டு சென்று திருநாகேசுரத்தில் தங்கிச் சுவாமி தரிசனஞ்செய்து, மூன்றுநாள் இருந்து பிதிரரைத் திலதருப் பணத்தாலும்பிண்டதானத்தினாலும்மகிழ்வித்தான். சற்பாத் திரர்களுக்குப் பல தானங்கள் செய்தான்.

பின் நாலாநாள் அதிகாலையில் எழுந்து நியமங்கள் முடித்து நாகம் வழிபாடு செய்த கனகமலையை வணங்கி

நித்தஞ் செய்கடனை முடித்து நாகேசனிடம் விடையும் பெற்றுப் பக்கத்தில் யாவருஞ்சூழ, திருவைந்தெழுத்தை யோதி வழிச்சென்று திருத்திலதைப்பதியை அடைந்தான்.

## காலவமகரிஷி ஆலயத்திற்குள் அழைத்துச்சென்று சுவாமி தெரிசனம் செய்து வைத்தல்.

அரசன் திருத்திலதைப்பதியை எல்லையில் மும்முறை வலம் வந்து மந்தாரவனேசுவரர் கோயிலை நோக்கி பேரன்போடு வாயிலையடைந்து நிற்பவன் விபூதியணிந்து உருத்திராக்கம் பூண்டு பரமசிவன்போல் நிற்குங்காலவமுனிவரை கண்டு, கைகள் சிரமேற்குவிய "நான் சுஜ்ஜோதிகன் என்று சொல்லி விழுந்து கும்பிட்டு நின்றான்.

நிற்கும் வேந்தனைப் பார்த்து காலவர் சொல்வது:— "வேந்தே! நீ வாழ்க, நின் குலத்தோர்வாழ்க, பூமியில் நின் நாடு வாழ்க, நீ எண்ணிய காரியங்களெல்லாம் ஒன்றரை மாதத்தில் சித்திபெறும்" என்று காலவர் ஆசிகூறி, அரசனை ஆலயத்திற்குள் அழைத்துச்சென்று சிவனையும் சுவர்ண வல்லி அம்மையையும் தரிசனஞ்செய்துவைத்தார். அரசன் காலவ முனியின் ஆசியையும் சங்கரன் அருளும் பெற்று மறையவர் புரோகிதருடன் கூடி தீர்த்தம் ஆடும்படி சென்றான். பிரமதீர்த்தம் தேவ தீர்த்தம் சக்கர தீர்த்தம் மார்க்கண்ட தீர்த்தம் என்பவற்றில் சென்று விதிப்படி மூழ்கிப் பின் திலதைப்பதி தீர்த்தத்தில் மூழ்கி நித்திய நியமங்களை முடித்து, தென்புலத்தாருக்கும் தேவருக்கும் திலதருப்பணஞ்செய்து தேவ காரியம் பலவும் செய்தான். வேதி

யர்க்குத் தானங்கொடுத்தான். வறியவருக்குப் பொன்னும் ஆடையும் ஈந்தான். அமாவாசை வரும் தினம் எது என வெண்ணிக் காத்திருந்தான்.

உருத்திராக்ஷ லிங்கத்திற்குப் பஞ்சாமிர்தம் பல பஞ்சாமிர்தம் அபிஷேகம் புரிந்து சாகம் மூலம் வருக்கான்னம் நிவேதனஞ்செய்து மனமகிழ்ந்து மூவாயிரம் பேருக்குச் சமாராதனை புரிந்து ஐந்துநாள் வரையும் மிகவும் அறுசுவையுணவிந்து அமாவாசை சாரக்கண்டு காலையில் எழுந்து அரிநதியில் ஸ்நானஞ்செய்து பின் தேவதீர்த்த முதலிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து தன்னுடைய நியமமுடித்துச் சிவபூசையும் நிறைவேற்றி "மார்க்கண்டன் வசிட்டன் பாரத்துவாசன் முதலான முனிவர் பிதிரர்காரியங்களை நடுப்பகலில் செய்யும்படி சொன்னார்கள்."

ஆகையால் யானும் அவர்சொற்படி செய்வேன்என்று அடையும்போது நடுப்பகல் வர, அவனும் பிரம தீர்த்தக் கரையையடைந்தான் அக்கரையில் எட்டுத்திக்கிலும் உள்ளவர்கள் யாவரும் மகிழ்ந்து விரும்பி நின்றார்கள்.

காலவமுனிவர் ஆணைபெற்று அரசன் மிகவும் மகிழ்ந்து தேவர்களும் இயக்கரும் கணங்களும் கரையில் நிற்பதைக் கண்டான்.

கவ்வியவாகன் அனலன் அக்கினி சுவாத்தன் பருகிஷத்து ஆச்சியபன் என்னும் தேவசாதிப் பிதிரரும் அரசனுடைய பிதிரர்களும் திரண்டு வந்தனர். உத்தம வேந்தன் இவர்களைக்கண்டு மகிழ்ந்து பிரம தீர்த்தத்தில் ஸ்நானம்

செய்து புரோகிதர் காட்டும் வழியாகச் சங்கற்பஞ்செய்து சபதம் செய்வான்.

தென்புலப் பிதிரர் வந்து திலோதக பிண்டந் தன்னை
அன்புடன் என் கண்காண அகம்மகிழ்ந்து உண்ணு ரேன்னின்
மன்குலத் துதித்தேன் அல்லேன் மரபினுல் தந்தை சொல்லைக்
கன்றினன் மறுத்தான் எய்துங் கடுநரகு எய்துவேன் ஏ.

என்றும் இன்னும் பலவாறும் சபதங்கூறி, திலதர்ப் பணம் பிண்டம் இவைகளை ஈந்தான். திவ்விய தேவலிங் கத்திலிருந்து தோன்றிப் பிதிரர்கள் தமது கரங்களால் ஏந்தி காணும்படி உண்டார்கள். அது தேவர்கள் அமுத முண் ணுதல்போல விருந்தது,

உண்டதை அரசன் கண்டான் உவகை யணுகி நின்றுன்
திண்திறல் அரசே கேட்பாய் திசையெலாம் நின்சீர் ஓங்க
மிண்டிய போரில் நீயே விளங்குதி வெற்றி பேற்று
மண்டல மிசை நீ வாழ்க மன்னுயிர் சேழித்து வாழ்க.

என்று பல் வரங்கள் ஈந்து ஏகினுர் பிதிரர். அரசன் அழியாத வரங்களைப் பெற்றுத் தனது செயலையும் ஈசன் அருள் செய்த பேற்றையும் உலகத்தில் நிலைபெற நாட்டி ஞன். இத்தலம் திலதருப்பணபுரி யென்னும் பெயரால் விளங்கியது. அரசன் நித்திய பூசைக்காக ஒருகோடி பொன்னை நிபந்தமாக வைத்தான்.

அரசனுடன் வந்த அந்தணர் முனிவர் மற்றையோர் யாவரும் தீர்த்தத்திலே தோய்ந்து தருப்பணஞ்செய்து

தங்கள் தங்கள் பிதிரர்களை மகிழ்வித்து வரங்களையும் பெற்ருர்கள். தேவர்கள் பூ மழை பொழிந்தனர்.

திலதைப்பதியில் வாழ்வோரும் பக்கத்தில் உள்ள திருப்பதிகளில் வாழ்வோரும் ஒன்று கூடி வாழ்த்தி நின்ருர்கள். ஆடிப்பாடித்துதித்து சுவர்ணவல்லி பங்கனை வணங்கி நின்ருர்கள். இவையெல்லாம் நிகழ்ந்தபின் இரத்தினலிங்கமொன்றை அரசன் திலதைப்பதிக்குத் தென்பால் மாயவற்குந் தென்பால் தேவ வர்ணேசன் எனப்பெயர் சூட்டி ஆதிசைவரால் பிரதிட்டை செய்வித்தான். நித்திய பூசைக்கு ஒருகோடி பொன் நிபந்தமாக வைத்தான்.

நாரதன் மறுபடியும் வந்து அரசனைக்கண்டு ஆசிகூறி திலதர்ப்பணப் பெருமையை எடுத்து நாரதருக்கு அரசன் சொல்ல நாரதர் தலத்தின் பெருமையைச்சொல்ல இவ்விதம் இருவரும் மூன்றுநாள் வரையும் பேசிக்கொண்டிருந்தனர். பின் நாரதர் தன்னூரை நோக்கிச் சென்ருர். நாரதர் போனபின் அரசன் பிராமணருக்கு அளவற்ற தானங்கள் ஈந்து திலதைப்பதி நாதன் மலரடி வணங்கிப் பூரண விடை பெற்று தன் நகரை அடைந்தான்.

அரசன் பிரதிட்டை செய்த தேவ வர்ம லிங்கத்தை தியானஞ் செய்வோரும் வணங்குவோரும் இம்மையில் அரசராகி வாழ்ந்து பின் மறுமையில் சிவலோகத்தை அடைவார்கள். உலகத்தில் யாவர் வபனஞ்செய்து ஸ்நானஞ் செய்து தருப்பணம் பிண்டம் ஈந்து மகிழ்வாரோ அவரே புத்திரர் என்று சொல்லப்படுவார்கள். மற்றையோர் புத்திரர் ஆகார். இது சத்தியம் முக்காலும் சத்தியம்.

பிதிரருக்குச் சிரார்த்தஞ் செய்து சிவனடியாருக்கும் மறையோருக்கும் விருப்புடன் அமுதளிப்போர் சிவகதி சேர்வார் இத்தல புராணத்தைச் சொல்வோரும் கேட்போரும் படிப்போரும் மனமகிழ்ச்சியோடு சிவபுரஞ்சேர்வார். நெய்யினாலும் எண்ணெயினாலும் தீபமேற்றுவோரும் திருவிழா நடத்துவோரும் கைலாசத்தை அடைவார். திருத்தலைப்பதி நாதனுக்குப் பூமாலை சந்தனக் கலவை பட்டாடை முத்து மாலை மதாணி சாத்தி வணங்கும் அன்பர்களும், குடைகொடி ஆலவட்டம் தூபக்கால் தீபக்கால் இடபவாகனம் மயில் வாகனம் சிங்க வாகனம் அன்ன வாகனம் என்னும் இவைகளை ஈவோரும் அன்பினால் மந்தார நாயகனைத் தியானிப்போரும், அவனுடைய ஆலயத்தில் திருவலகிடுவோரும் கோடி குலத்தோர் சூழ திருக்கயிலையை அடைந்து அங்குள்ள போகங்களை அனுபவித்து வாழ்ந்து சிவனது திருவடி நிழலை அடைவார்கள். திலதருப்பணபுரி ஆலயத்தில் வெள்ளியினாலும் பொன்னினாலும் திருப்பணி செய்வோரும் திருக்கயிலையில் சென்று சிவனை வணங்கிக் கொண்டிருப்பார்கள்.

திலதருப்பணபுரியில் மந்தார லிங்கத்தைக் கருப்பஞ்சாறு பல பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம் இவைகளால் அபிஷேகம் செய்தோர் இம்மையில் அரச இன்பத்தை அனுபவித்து மறுமையில் சிவலோகத்தை அடைவார்கள்.

என்று நற்சோதிவேந்தன் மந்தாரவனத்தை அடைந்து திலதருப்பணம் செய்த மான்மியத்தை நைமிசாரண்ணிய முனிவருக்குச் சூதமுனிவர் விரித்துச்சொன்னார்.

நற்சோதிகன் திலதருப்பணஞ்செய் படலம்
முற்றிற்று.

# தீர்த்தப் படலம்.



ஐயனே போற்றி யெங்க ளத்தனே போற்றி போற்றி
மெய்யவா மறைகளாலு மேவுதற் கரியாய் போற்றி
செய்யினிற் சங்க மூருந் திலதருப்பணப் பேர் கொண்ட
துய்யநற் பதியில் வாழுஞ் சோதியே போற்றி போற்றி.

நைமிசாரண்ணிய முனிவர்களே!

திலதருப்பணப்புரியில் உள்ள தீர்த்தங்கள் அவற்றில் முழுகினோர் அடையும் பயன் ஸ்நானஞ் செய்யுங்காலம் என்னும் இவற்றைச்சொல்வோம் என்று சூதர் சொன்னார். விருச்சிக மாதத்தில் ஆதிவாரத்தில் தேவி தீர்த்தத்தில் ஆதித்த மந்திரஞ்சொல்லி உதய காலத்தில் முழுகித் தருப்பணஞ் செய்வோர் பாவநீங்கி ஆதித்த லோகஞ்சேர்வார். மேற்படி தேவி தீர்த்தத்தில் மாசி மாதம் முழுதும் முழுகித் திலதைப்பதி நாதன் மலரடி வணங்குவோருக்கு பெருந் துயர் நீங்கிப் புத்திரப்பேறும் செல்வமும் உண்டாம்.

மார்கழி மாதத்தில் நாள்தோறும் விடியற்காலத்தில் பிரம தீர்த்தத்தில் பிரம மந்திரத்தைச் சொல்லி முழுகினால் அவர்கள் சிவலோகத்தை அடைவார்கள். மேற்சொன்ன

மார்கழி மாதத்தில் திருவாதிரையில் நடேசருக்கு அபிஷேகஞ்செய்து அலங்காரம் உபசாரஞ்செய்வோர் வெள்ளியங்கிரியை அடைவார்கள்.

சக்கரதீர்த்தத்தில் மாசி மாதத்தில் சூரியோதயத்தில் நாராயண மந்திரங்கூறி ஸ்நானஞ்செய்வோர் மோக்ஷம் அடைவார்கள். மாசியில் சிவராத்திரியில் மந்தாரவன நாதனை நான்கு சாமங்களிலும் பூசை செய்வோர் தேவ விமானத்தில் ஏறி உலகமெலாங் கண்டு சிவலோகத்தில் வீற்றிருப்பார்கள்.

வசிட்ட தீர்த்தத்தில் வைகாசி மாதத்தில் விசாகநக்ஷத்திர பூரணையிலும் சூரியகிரகணம் சந்திரகிரகணம் மாதப்பிறப்பு என்னும் இவைகளிலும் ஸ்நானஞ் செய்வோர் சிவ சாயுஜ்ஜியம் பெறுவார்கள்.

கும்ப மாதத்திலும் மீன மாதத்திலும் அன்புடன் அரிசிலாற்றில் ஸ்நானஞ் செய்வோர் யாகஞ்செய்த பயனையெய்தி சிவலோகத்திற் சேர்வார்கள். பன்னிரண்டு மாதம் முழுவதும் வைகறைப்பொழுதில் சங்கற்பஞ்செய்து அரிசிலாற்றில் முழுகினால் அசுவமேத யாகப்பயனை அடைந்து சிவனுடைய திருவடி நிழலில் உறைவார்கள்.

அரிசிலாற்றில் ஜலத்தை அள்ளி ஆசமனஞ் செய்தோர் சோமயாகத்தில் சோமபானஞ் செய்தாற்போன்ற பயனை அடைவார். அமாவாசை பூரணை மாதப்பிறப்பு என்னும் புண்ணிய தினங்களில் சுவர்ணவல்லியையும் உருத்திராக்ஷ

வடிவமான பெருமான் திருவடியையும் நெஞ்சில் இருத்தி மும்முறை ஆசமனம் செய்வோர் தாயின் முலைப்பாலுண்ணார் பிறப்பெய்தார் சிவன் திருவடிகளை அடைவார். என்று சூதமுனிவர் திருத்திலதைப்பதிப் புராணத்தை முனிவர்களுக்கு உரைத்தருளினர்.

இந்தநற் புராணந் தன்னை யியம்பினர் கேட்போர் தாமும்
சிந்தையின் மகிழ்ச்சி யெய்திச் செல்வரா யினிது வாழ்ந்து
பந்தமு மகன்று நீங்கப் பரனுறை யுலக மெய்தி
வந்த பேரின்ப மூழ்கிச் சிவனடி மருவி வாழ்வார்.

தீர்த்தப்படலம் முற்றிற்று.

திருத்திலதைப்பதிப் புராண வசனம் முற்றுப்பெற்றது.

சுவர்ணவல்லி அம்பாள் சமேத மந்தாரவனநாயகர்
மலரடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.



Printed at the VASANTHA PRESS, MAYAVARAM.

